12th February 1959]

than 8 hours a day or 48 hours a week. For overtime work, payment of overtime wages should be made at twice the ordinary rates of wages. The provisions of the Madras Shops and Establishments Act, 1947, regulating the working hours of persons employed and payment of overtime wages are enforced in respect of all shops and establishments employing more than 3 persons.

SRI K. SATTANATHA KARAYALAR : சென்னையிலே உள்ள சலூன்களில் அதிலும் முக்கியமான சலூன்களில் ஒன்றிலுமே இந்தச் சட்டம் அமுலுக்கு வரவில்லையே ? ஏன் ?

THE HON. SRI R. VENKATARAMAN : அப்படி எந்த சலூனிலாவது இந்தச் சட்டம் அமுல் நடத்தப்படவில்லை என்று சொன்னால், ஒன்று அதில் மூன்று பேர்களுக்கு குறைவான சிப்பந்திகள் வேலை செய்து கொண்டிருக்கலாம். அவர்களுக்கு "எக்ஸெம்ப்ஷன்" கொடுக்கப்பட்டிருக்கிறது. அந்தக் காரணத்தினால் இருக்கலாம். அப்படி எந்த சலூனில் இந்தச் சட்டம் அமுல் நடத்தப்படவில்லை என்று உடனடியாக சர்க்காருக்கு புகார் செய்தால் சர்க்கார் அதை கவனிப்பார்கள்.

## *Government Offices*

*241 *Q.*—SRI S. LAZAR : Will the Hon. the Chief Minister be pleased to state whether the Government propose to decentralise the location of Government Offices now situated in Madras?

THE HON. SRI C. SUBRAMANIAM : There is no such proposal under consideration.

SRI S. LAZAR : சென்னை நகரம் ஒரு மூலையில் இருக்கும் காரணத்தினாலும், ஜனநெருக்கடியை தவிர்க்கக்கூடிய நோக்கத்தோடும், இனிமேல்பட்டு நிறுவ இருக்கின்ற அலுவலகங்களையாவது ராஜ்யத்தின் மற்ற இடங்களில் நிறுவ அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அது எந்த அலுவலகம் என்பதைப் பொறுத்திருக்கிறது. இங்கே சர்க்கார் நடக்கின்ற இடத்திலேயே அந்த அலுவலகம் இருக்கவேண்டியது அவசியமாக இருந்தால், அதை வேறு இடத்திலே அமைக்க முடியாது.

## *Minor Irrigation Project*

* 242 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) சிறிய நீர்ப்பாசனத் திட்டங்களின் அபிவிருத்திக்காக மத்திய அரசாங்கத்தினிடமிருந்து நம் மாநில அரசாங்கத்திற்கு 1957-58-ல் என்ன உதவி கிடைத்திருக்கிறது ?

(ஆ) மான்யம் எவ்வளவு ?

(இ) கடன் தொகை எவ்வளவு ?

(ஈ) சிறிய நீர்ப்பாசன அபிவிருத்திக்காக எந்தெந்த திட்டங்களை மாநில அரசாங்கம் தேர்ந்தெடுத்திருக்கிறது ?

(உ) அத் திட்டங்கள் ஒவ்வொன்றிற்கும் ஆகும் செலவு எவ்வளவு ?

[12th February 1959

(ஊ) ஒவ்வொரு திட்டத்தின் மூலம் எத்தனை ஏக்கருக்குப் பாசன வசதி கிடைக்கும் ?

(எ) இப்பொழுது எடுத்துக்கொண்டிருக்கும் திட்டங்களையல்லாமல் புதிதாய் எடுத்துக்கொள்ள உத்தேசித்திருக்கும் திட்டங்கள் எவை ?

(ஏ) அத்திட்டங்களுக்காகக் கூடிய செலவு எவ்வளவு ?

(ஐ) அதன் மூலம் எத்தனை ஏக்கர் நிலத்திற்குப் பாசன வசதி கொடுக்க முடியும் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : *(a)* to *(g)* A statement [a] is placed on the table of the House.

*(h)* and *(i)* Do not arise.

SRI A. VEDARATHNAM : மேஜையின் மீது வைக்கப்பட்டிருக்கிற ஜாபிதாவில் கண்டபடி "ரிவர் பம்பிங் ஸ்கீம்" ரூ. 23,000 செலவில் 600 ஏக்கர் பாசனத்திற்கு எடுத்திருக்கிற இடம் எது ? புதிதாக ஆரம்பிக்கப் போகும் "ரிவர் பம்பிங் ஸ்கீம்" ஆறு எந்த இடத்தில் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அதுபற்றி இப்பொழுது என்னிடம் தகவல் இல்லை.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : What is the amount proposed to be sent by the Government under the current year, that is, 1958–59?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : If the hon. Leader of the Opposition wants information about the budget-year, he may kindly wait till the budget is presented.

SRI S. M. ANNAMALAI : நம் சர்க்கார் மத்திய சர்க்காரிடம் மான்யமாகவும், கடனாகவும் பெற்ற தொகை ரூ. 61·38 லட்சம். இந்தத் தொகையானது மிகவும் குறைவு. நம்முடைய மாநில சர்க்கார் கேட்டது எவ்வளவு ? அவர்கள் சாங்ஷன் செய்தது எவ்வளவு ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : நாம் கேட்டதை யெல்லாம் அவர்கள் சாங்ஷன் செய்திருக்கிறார்கள் என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

SRI K. RAMACHANDRAN : "ஸ்பெஷல் மைனர் இர்ரிகேஷன் ப்ரொகிராமின்" கீழ் 1957–58-ல் 55 லட்சத்து சொச்ச ரூபாய் செலவாகியிருக்கிறதே, அது என்ன ஸ்கீம் என்று சொல்ல முடியுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஸ்பெஷல் மைனர் இர்ரிகேஷன் ஸ்கீமின் கீழ் அநேகமாக அது சிறிய ஏரிகள் மராமத்து வேலைகள்.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : My question is about the current year and not the next financial year. So, will the Hon. Minister give a reply if he has got the figures?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I am sorry I do not have the total figure with me just now.

---

[a] Printed as Appendix I on pages 239–240 infra.